## சாதிலிங்க மாத்திரை.

* திரிகடு சிற்ற ரத்தை சிற்றேலம் சாதிக் காயே
வருகராய் பக்க ராவே வசுவாசி கடுக்கா யெல்லாம்
உரைதரு வகைக முஞ்ச தொன்றாகக் கூட்டிச் சுத்தி
மருவிய கொடிய வேலி வண்மையாய்க் கஷாயஞ் செய்தே. ( )

சாற்றினை விட்டி ரண்டு சாமமே யரைத்துச் சுத்தி
தோற்றிய சாதி லிங்கஞ் சொல்கழஞ் சிரண்ட தென்னும்
கூற்றினைச் சேர்த்துப் பின்னர்க் கொடிவேலிக் கஷாயத் தாலே
தேற்றமாய் நாலு சாமஞ் சேரவே யரைத்துக் கொண்டு. (௧அ௬)

குன்றிபின் வித முண்டை கொடுவலி சன்னி குத்துத்
துன்றிய மேல்மூச் சல்லாற் சுரமந்தம் படுவ ளுதி
ஒன்றிய முடக்கு வாத முட்குத்துப் பிறவீச் சோடுங்
கன்றிய திமிர்வி றைப்புக் கழிச்சலே யண்ட வாயு. (௧அ௭)

விடமுத லான வெல்லாம் விட்டோடு நோயா ளிக்கு
வடவைநேர் சாதி லிங்க மாத்திரை யென்று பேரை
அடையுமிவ் வவிழ்த நாம மலைகடல் சூழ்ந்த வித்தப்
புடவியி லெவர்க ளாலும் புகன்றிட வெளிய தாமே. (௧அ௮)

## பூரணசந்திராதி மாத்திரை.

சுக்கதி விடய நன்மை தொகுவிழா லரிசி தன்னோ
டக்கராத் தேவ தார மதிமது ரங்க ராம்பு
மிக்கநன் னாரி வேர்வான் மிளகுசீ ரகமே மென்சா
திக்காய்சிற் றரத்தை யோடுசிற் றேலங் கறுவாப்பட்டை. (௧அ௯)

விளம்பிய நத்தைச் சூரி விரையிவை யளவு வேண்டும்
களங்கமில் கழஞ்சொவ் வொன்றாங் கருடபச் சைக்கல் லிரெட்
டுளங்கொளு மிதற்கி ரட்டி யுறுகாண்டா மிருகக் கொம்பு
வளம்பெறு கழஞ்சு கூட்டி வண்மையோர் சிந்திற் றண்டின். ( )

சாற்றொடு பொன்னாங் காணிச் சாறுமோ ரிதழ்க்கஞ் சத்தின்
மேற்றிகழ் சாறு நேரே விளம்பவொன் றோர்நா ளாட்டித்

* திரிகடுக்ரயதமைத் என்றும பாடம.

தேற்றமாய் மூன்று நாளுஞ் சென்றபின் வழித்துருட்டித்
தோற்றுறு குளிகை வீதந் தூதுளம் பழமே குன்றி. (கககக)

குன்றியி னளவா முண்டை குழந்தைகட் காவின் பாலில்
மென்றிடுஞ் சீனி தன்னின் மிஞ்சிய விஞ்சிச் சாற்றிற்
தின்றிட வனுபா னத்திற் செப்புநோய்க் கேற்ற வண்ணம்
குன்றிய தேக மெங்குங் கொடும்பிணி குறையு மன்றே. (ககக௨)

குறையுமே குழந்தை கட்குக் கொண்டிடு நோய்க ளெல்லாம்
அறையுந்தூ துளம்ப ழத்தி னளவுண்டை மூதியோ ருண்ணா
கிறைதரு மிருமல் பித்த சுரந்தாகம் வரட்சி நெஞ்சில்
உறைதரு கபமே பீழை யுரத்திடு மதிசா ரம்போம். (கககூ)

போகுமே நீர்க்கடுப்புப் பெரும்பாடு வெட்டை யெல்லாம்
சாகுமே யத்திக் காய்ச்சல் சலரோகங் கபால நீங்கும்
ஏகுமே பயித்தி யங்க ளென்றைக்குஞ் சவுக்ய மாகும்
நாகமே லரனார் வைத்த நரர்களுக் கமிர்த மாமே. (கககச)

ஆகுமே யுலகு தன்னி லடைந்திடுங் காந்தி யென்றும்
வேகமார் வசூரி யென்ற வெம்மையை நீக்கு மென்றும்
தாகமார் சசியே யென்று சாற்றிய மருந்தின் பேரைப்
போகமோ டறையின் மிக்க பூரண சந்தி ராதி. (கககரு)

## மிருதசஞ்சீவினி மாத்திரை.

மிருதசஞ் சீவி னிப்பேர் மேம்படு மருந்து கேண்மோ
தருமுத்துப் பவளம் வெள்ளி தங்கநற் குங்கு மப்பூ
வருகோரோ சனைபி னோடு வயங்குமிக் துப்புக் காண்டா
மிருகத்தின் கொம்பு தேற்று விரையுடன் கெருட பச்சை. ()

பச்சைக்கர்ப் பூர மான்கொம் பக்கராப் பழுதில் சுக்கோ
டச்சமி லுருத்தி ராக்க மதிமது ரங்க டுக்காய்
கொச்சியி லேலங் கோட்டந் திப்பிலி மிளகு கூறும்
நச்சுமீ ரரத்தை யோடு நவிரில்சீ ரகமி ரண்டே. (கககள)

ஏதிலாக் கராம்பி னோடு வசுவாசி யிமையோர் தாரு
தீதிலாச் சாதிக் காயே சிறுதேக்குக் கறுவாப் பட்டை

மேதகு கடுகு ரோணி விடயம்வான் மிளகு மேலோர்
ஓதிய நாகம் பூவு மொன்றொரு கழஞ்சு தூக்கே. (௧௯௮)

தூக்குமிம் மருந்த ரைக்கச் சொல்லுதுங் கஷாயங் கேளு
மீக்கிள ராடா தோடை வேரொரு பலந்தான் றூள
தாக்கியெண் படிநீர் விட்டே யஃதொரு படியாய்க் காய்ச்சித்
தாக்கியே யோர்நா ளாட்டு தப்பிலிம் முறைய தாக. (௧௯௯)

ஆகிய வில்வ வேர்த்தூ ளரியசெண் பகப்பூச் சந்தம்
பாகமாய்ப் பலமொவ் வொன்று பகுத்துவெவ் வேறாய் முன்னர்ப்
போகிய முறைய தாகக் கஷாயஞ்செய் தரைப்பாய் போற்றும்
ஓகையார் கஷாய மொவ்வொன் றெவ்வொரு நாளைக் கென்னே. ()

அரியவிம் முறைமு டிந்த வதற்குப்பின் சாதி லிங்கம்
உரைசெயுஞ் சுத்தி செய்தே யுறுபதின் கழஞ்சு தன்னை
வரைவதாய்க் கூட்டி நல்ல வன்னில வங்கப் பட்டை
தெரியுமோர் பலமெ டுத்துத் தெளிவுறக் கஷாயஞ் செய்தே. ()

செய்துநாற் சாம நன்றாய்த் தெரிவுற வரைத்து ருட்டி
மெய்யுறக் குளிகை வீதம் விளம்பிய சிறுமுற்கம் போற்
செய்துநீ கிழவு லர்த்தித் திறம்பட வனுபா னத்தால்
வெய்யரோ கங்க ளர்க்கும் விளம்பிதற் கிணைவே றுண்டோ. ()

கயமீளை யிருமல் மூச்சுக் காட்டுபீ லிகைசு வாதம்
பயமுறு சன்னி யென்னும் பதின்மூன்றும் பறக்கு மென்ப
சயமுறு மருந்தைக் கண்டாற் சயவகை தொண்ணூற் றாறும்
துயர்செயும் பித்தந் தானுந் தொலைந்திடு மின்னுங் கேளே. ()

வாந்திரா வரட்சி தோஷம் வாதநா முள்ளு விக்கல்
காந்தனீர்த் தோஷ மூலங் கணைச்சுரங் கழிச்சல் கோழை
சாந்தமி லத்திக் காய்ச்சல் சலரோக மதிசா ரந்தான்
போந்திடும் பழஞ்சு ரங்கள் பெரும்பாடு சுர்வ லிப்பு. (௨0௪)

மேகமக் கரங்கி ராணி வெட்டையே மந்தங் குன்மம்
ஆகுமிந் நோய்க ளெல்லா மருணன்முன் பனியே போலப்
போகுநல் லனுபா னத்திற் புகலுமிம் மருந்தை யீந்தால்
ஆகவே சவமா னாலு மாருயிர் வந்து பேசும். (௨0௫)

மலரயன் விதித்த வந்தம் வந்துதான் மாணித் தாலும்
பெலமுட னெழுந்தி ருந்து பேசிப்பின் மரண மாவார்
நிலவிய விதியை யாவு நீக்குமோ நீக்க மாட்டா
அவ்வுறு நோயை நீக்க அவுடதஞ் செய்வ தாமே. (உசு)

## அருணோதய மாத்திரை.

துருசுவெண் காரநாவி துத்தம் பொன் னரிதா ரத்தோ
டிருவியே சாதி லிங்க மிக்துப்பு நல்வேர்க் கொம்பு
திரிபலை யிவையே யல்லாற் சேர்மனோ சிலையுஞ் செய்ய
திருவிட மும்வ கைக்கு நிறுத்தொவ்வோர் கழஞ்ச தாக. (உ௭)

சுத்திசெய் தோர்வா ளத்தான் சொல்லிரு கழஞ்சா யெல்லாம்
சத்துமிக் குள்ள கையான் றகரையின் சாற்று லாட்டிச்
சித்தமாய் நாலு சாமஞ் செவ்வையா யரைத்துப் பின்னர்
ஒத்திடு முற்கம் போல வுருட்டியே வைத்துக் கொள்ளே. (உ௮)

வைத்தரு ணோதை யம்போல் மாத்திரை யாகு மித்தை
ஒத்திடு மனுபா னத்தி லூட்டிடிற் ருேஷஞ் சன்னி
மெத்திய வாயு குன்மம் வீக்கமக் தம்வ லிப்புக்
குத்துமீ ராமை வாதங் கொடுமல சலமும் போமே. (உகூ)

## வாதாரி மாத்திரை.

இரசங்கெந் தகமே நோய்கட் கிளியசா திலிங்க மோடு
வருகாந்த மிரும்புத் தூளும் வரன்முறை சுத்தி செய்தே
வருமுறை யொன்றி ரண்டு வழங்குமூன் றெருநான் கெட்டாய்த்
தருபங்கு சேர்த்துக் கையான் றகரையின் சாறு தன்னல். ( )

ஆறுநா ளரைத்துக் குன்றி யளவதா யுருட்டிப் பின்னர்க்
கூறிடு நோய்கட் கேற்ற குவனு பானஞ் சேர்த்து
மாறின்றிக் கொடுக்க வாத மந்தார காசஞ் சூலை
காறிடுங் குட்டங் குன்ம நவில்மகோ தரமே கோளமு. (உகக)

பேசருங் கயமுட் குத்துப் பிறவிச்சுப் பெருவி யாதி
ஆசில்கா மாலை நாட்செ லருள்சுரங் குமர கண்டன்

கூசுபீ லிகையே மந்தங் கொடுமல சலவ டைப்பு
நாசமாம் புடையன் வண்டு நாகத்தின் கடியி னோடே. (௨௧௨)

எலிபுலி முகச்சி லந்திக் கடிசேட மிரும ருனும்
வலியொரு பன்னி ரண்டும் வலுத்திடு மண்ட வாதம்
கொலுங்கண்ட மாலை வாயு கோதாரிக் கழிச்ச றீமை
மலியுருத் திரமாம் வாயு முறைச்சுர மற்று நோயும். (௨௧௩)

சுடர்கண்ட பனியே போலத் தொலைந்தஞ்சி யோடிப் போகும்
படரும்வா தாரி யென்று பன்னுமிம் மருந்து தன்னை
மடமலி மகளிர் பிள்ளைப் பெறநொந்து வருந்து வாரேல்
அடைவுறு மநுபா னத்தி லருத்திடப் பெறுவார் பிள்ளை. (௨௧௪)

## கோரோசனை மாத்திரை.

கோட்டமக் கருச்சிற் றேலங் கொளுஞ்சாதிக் காய்க ராம்பு
வாட்டமில் லாம லைந்தும் வகைக்கொரு கழஞ்சு தூக்கி
ஆட்டிநன் காகத் தூள்செய் தருங்கோரோ சனையி னோடு
காட்டுகுங் குமப்பூப் பச்சைக் கர்ப்பூரங் கழஞ்சு கொள்ளே. ()

வகையொவ்வொன் றொருகழஞ்சாய்மருவிடச்சேர்த்துப்பின்னர்த்
தகைபெறு மலாக்காய்ச் சந்தந் தானொரு பலந்தூள் செய்தே
புகரற நான்கு நாழி புனலரை நாழி யாகப்
புகைபடு கனலிற் காய்ச்சிப் பொற்புற வடித்துக் கொள்ளே. ()

துப்புறு மிந்நீர் விட்டுத் துகளற விரண்டு சாமம்
தப்பற வரைத்துப் பின்னர்த் தயங்கில வங்கப் பட்டை
இப்படிக் கஷாயந் தான்செய் திருசாம மரைத்துக் கொண்டே
அப்பிரே கத்தி னோடே யருஞ்சூத சிந்தூ ரந்தான். (௨௧௭)

ஓரொன்று கழஞ்சு கூட்டி யுற்றசெண் பகத்தின் பூவைச்
சீரொன்ற முன்போற் றானே செவ்வையாய்க் கஷாயஞ் செய்தந்
நீரொன்ற விட்ட ரைத்த நெறியெனப் புகல்வர் நீத்தோர்
ஈரொன்று சிந்தூ ரங்க ளின்றெனி லியம்பக் கேண்மோ. (௨௧௮)

சொன்முறை சுத்தி செய்த துகளில்சா திலிங்க பற்பம்
பன்னுராற் கழஞ்சு கூட்டி யரைக்கினும் பழுது வாரா

தின்னதைச் சேர்த்த ரைத்தே யெழிலுறு முண்டை குன்றி
யென்னவே யுருட்டிப் பாண்டத் திட்டதை நிழலு லர்த்தே. ()

சேற்றுமந் தொண்ணூற் ருறுஞ் செப்புநீர்த் தோஷஞ் சன்னி
போற்றியே யோடிப் போகும் புகல்பெரும் பாடு மூலம்
கூற்றுநோய் சுவாத மூர்சுக் குறைவறு தொய்வி னோடு
சாற்றதி சாரக் காய்ச்ச ருகக்ஷ வரட்சி யின்னும். (உஉ0)

அக்கர மென்பு ருக்கி யருஞ்சல ரோக மல்லால்
மிக்கசேட் டுமசு ரம்போம் வெம்பித்த சுரமும் போகும்
வைக்குங்கோ ரோச னைப்பேர் மாத்திரை யிதனி னுடம்
தக்கவிம் மருந் தினாலே தணிக்திடுஞ் சகல நோயும். (உஉக)

## சருவாங்க மாத்திரை.

உரைசரு வாங்க மென்னு மொப்பின்மாத் திரையைக் கேண்மோ
கருநாவி சவ்வீ ரங்கற் காந்தமிம் மூன்றுஞ் சுத்தி
அருகாமற் செய்து பின்ன ரருநத்தைச் சூரி வேரோ
டுரியவிவ் விரையு மெல்லா மோரள வாகச் சேரே. (உஉஉ)

*இருப்பவல் பேய்க்கொம் மட்டி யிலைதயிர் வேளை மத்தம்
அருப்பமி னிலத்தின் வாகை யவுரியே குப்பை மேனி
மருக்கிளர் கொடிக்கொற் றானும் வகைவகை யாயி டித்துத்
தருக்கியே பிழிந்த சாற்றிற் றனித்தனி யெட்டு நாளே. (உஉங)

இப்படி யரைத்த பின்ன °ரிரசித மிவற்றி னுக்குத்
தப்பறச் சரியாய்க் கூட்டி யரைத்திடிற் சாரு மேன்மை
ஒப்பிலா விரசி தஞ்சேர்த் துடனரை யாம லுஞ்செய்
செப்புமாத் திரையின் வீதஞ் சிறுபய றளவ தாமே. (உஉச)

மண்டல மிம்ம ருந்தை வளம்பெறு மனுபா னத்திற்
கொண்டிடிற் சூலை குன்மங் கோழைகா மாலை யீழை
மண்டுமந் தார காசம் வளர்கபம் வெட்டை மேகம்
அண்டுமீ ராமை யேபே ராமையே கிரந்தி சோகை. (உஉரு)

---

* இருப்பவல்-குத்துக்காரச் சம்மட்டி. ° இரசிதம்-வெள்ளி.

மகோதர மிலிங்கப் புற்று மார்படைப் யோனிப் புற்று
நகுமேக வாத நாப்புண் ஞ்சிகா பீடங் கண்ட
மிகுமாலை சொறிசி ரங்கு விடமூறல் பிளவை கைகால்
புகுமுடக் கரையாப் பேவிற் புருதியே கிராணி வாதம். (௨௬)

சொல்லிய குமர கண்ட வலிகொடு மூறிகி ரந்தி
கல்லடைப் பதுவே மிக்க கரப்பனே கெற்ப சூலை
எல்லையின் மண்டை சூலை வெடிசூலை யோனிச் சூலை
வல்பவுந் திரமே கெர்ப்ப வாயுவிந் திரிய கண்டி. (௨௭)

கோதாரிக் கழிச்ச னீங்கும் கூறுமிம் மருந்து தன்னை
ஆதார மாக வேதா னடைவுறு மனுபா னத்தில்
ஓதிய முறையே யீந்தா லுவகையாய்ப் பெறுவார் பிள்ளை
தீதிலிம் மருந்த ருந்திற் றேகம்பொன் னாமெ வர்க்கும். (௨௮)

விரியனே புடைய னாகை விடங்கரு வழலை யல்லாற்
றிரிபுலி முகச்சி லந்தி தீயெலி முதல்வி டங்கட்
குரியநல் லனுபா னத்தி லூட்டிட வொழிந்து போகும்
புரையிலா விவற்றி லாய புண்ணும்போ முரைத்துப் போடில். )

பிரமியம் பெருவி யாதி பீலிகை பக்க வாயு
வருசிர குட்ட மண்ட வாயுவெய்ப் பிளைப்பு மூலம்
தருதசை யடைப்பே யாதி தவிர்த்திடும் வாயு வோடு
பரியெட்டுக் குன்மம் போகும் பாரினுக் கமிர்த மாமே. (௩௰)

உருத்திர வாயு வோடே யுட்குத்துப் பிறவீச் சாதி
வருத்திடும் பிணிக ணீங்கும் வளர்சன்னி யெல்லாம் போகும்
உருத்திடுஞ் சேட்டு மங்க ளுரைவிட் டோடுந் தீயின்
எரித்திட்டுப் புகையை யூட்ட வேகுமே கிரந்திப் புண்கள். ()

## வைணதேய மாத்திரை.

காக்கணங் கொவ்வை தன்னிற் கருதிலை கொடியே கொட்டை
ஆக்குவேர் காயே சூத மரியகோர் வாள மூள்ளி
தூக்குவெண் காரந் துத்தந் துரிசுகோந் தாளங் கொட்டை
நீக்கமில் வசம்பி னோடு பெருங்காய நிமிளை ரண்டே. (௩௨)

முக்கடு கடுகு ரோணி கடுக்காயே முதிர்நோய் போக்கும்
மிக்கசா திலிங்க மெல்லா மிகாமலோ ரளவெ டுத்தே
தக்கசம் பிரப்ப முத்திற் றனித்தனி சாறு வாங்கி
அக்கண மிரண்டு சாம மருங்கொடி வேலி வேரை. (உ௩௩)

செவ்வையாய்க் கஷாயம் வாங்கித் திருந்தவிட் டரையீர் சாமம்
எவ்வமில் குளிகை வீத மிசை குன்றி தூதுளத்திற்
கவ்விய பழம்போ லாகுங் களங்கமி னிழலு லர்த்தித்
திவ்விய மாகச் செப்பிற் சேர்த்துவை காற்றே றுமல். (உ௩௪)

வருத்திடும் வழலை நாகம் மண்டலி புடைய னோடு
விரித்திடும் விரிய னாதி விடத்தினுக் கேற்ற தான
அருத்திடு மனுபா னத்தி லருத்துநா துளப்ப மூய்போற்
பருத்திடு முண்டை கண்டாற் பறக்குமே விடங்க ளெல்லாம். ()

குன்றிபோற் குளிகை தன்னைக் கூறுநல் லனுபா னத்திற்
தின்றிட வெலிவி டங்க டீர்ந்திடும் புலிமு கந்தான்
ஒன்றிய சிலந்தி யாலே யுறுபெரு விடமும் போகும்
வன்றிறல் வயின தேய மாத்திரை யிதன்பேர் மாதோ. (உ௩௬)

## சங்கார ருத்திர மாத்திரை.

அரிதாரம் வசம்பே யித்துப் பருமனோ சிலைநேர் வாளம்
பொரிகாரம் பச்சை நாவி புகல்சிவப் புப்பா ஷாணம்
கருடபா ஷாணஞ் சூதங் *கறிபெருங் காய முள்ளி
வருமமுக் கிராய்வே °ருக்கு மல்கிடுந் துடரி வேரே. (உ௩௭)

எல்லாநல் வகைக முஞ்சொன் றினியசா திலிங்கந் தானும்
மல்கிரு கழஞ்சு தில்லை மரப்பால்விட் டொருசா மந்தான்
புல்லிட வரைத்தெ ருக்கின் புகரில்பால் பேய்ப்பி சுக்கின்
நல்லசா றிரண்டும் விட்டே யரையிரு சாம நன்றாய். (உ௩அ)

கொடிவேலிக் கஷாயத் தாலுங் குறித்தொரு சாம மாக
நடைமுறை யரைத்துக் கொண்டு நற்குன்றி யளவு ருட்டி
வடிவமாஞ் சிமிழில் வைத்து வளர்கரு வழலை நாகம்
புடையனே யாதி யான பொருவினு கக்க டிக்கு. (உ௩௯)

* கறி-மிளகு. ° உக்கு-சாம்பு.

கொடுத்திடிற் பருதி கண்ட கொடுவிருள் போல மாறும்
அடுத்திடும் பெருவி டங்கட் காமிது போலப் பூவிற்
படைத்திடு மருந்தொன் றில்லைப் பகருமாத் திரைப்பேர் சர்வ
விடத்தினைச் சங்கா ரஞ்செய் விளங்குருத் திரம தாமால். ()

## உக்கிராக் கிராணம்.

பெருமருந் தரைப்பு மஞ்சள் பிரண்டைவெண் ணொச்சி யோடே
திரிகடு மாவி லங்கை செறிகராம் பாடா தோடை
வருமொரு கழஞ்செ டுத்தே வறுத்தரை வத்திர காயம்
பிரியமாய்ச் செய்து பேணி வைத்திடிற் பிதற்றுஞ் சன்னி. ()

பத்தொடு மூன்றி னுக்கும் பகர்தோஷ நீரின் கோவை
மத்தமார் சிரத்தி ரைப்பு வாயுதான் றலைபிற் கொள்ளல்
ஒத்திடு மூக்கி லூத வுரைத்தநோய் பலவு மோடும்
மெத்துசித் திரத்தின் மூலி விளம்புசா திலிங்கங் கெந்தி. (௨௪௨)

இரதமுங் கூட்டி முன்ன ரியற்றிய வகையாய்ச் செய்தே
பெருகாக விடமே யாதி பெருவிட மடக்க சன்னி
தருவலி யெல்லா நீங்குஞ் சார்ந்திடு மூக்கி லூத
உரைபேய்கள் சன்னி யோட்டு முக்கிராக் கிராண மாமே. ()

## சன்னி முதலியவற்றிற்கு உண்டை கட்டல்.

முருங்கையின் வேரி றேடு கொடுவேலி மிளகே யுள்ளி
அருங்கடு கிந்த வைத்து மம்மியி லரைத்த பின்னர்
ஒருங்குசா ராயம் விட்டுக் குழைத்ததை யுள்ளங் காலிற்
பொருந்திய வுள்ளங் கைக ளிரண்டிற்கு மொவ்வோர் துட்டின்.

காசளவாக வைத்துக் கலவோட்டை யதற்கு மேல் வைத்
தாசிலாச் சீலைத் துண்டா லதுதனைக் கட்டப் போகும்
பேசரும் வாத சன்னி பெருவிடம் வலியே யேர்ப்பு
நாசமா மிதனைப் பூவி னலமெனக் கொண்டார் மேலோர். (௨௪௫)

கடிக்கிடுங் கடிகை யாறிற் கட்டினுர் வலிகொ திப்ப
தடைந்திடிற் கொடிய வேலி வேர்மிள கதுவுந் தூள்செய் [தே
திடம்பெறுபொட்டளிக்குளிட்*டெண்ணெய்கொதிக்கத்தோய்த்
தடங்க லில்லாம லொத்தச் சாற்றிடா தோடு மன்றே. (௨௪௬)

* எண்ணெய் - நல்லெண்ணெய்.

## மூலப்பவுந்திரத்திற்கு.

வளர்மூலப் பவுந்திரந்தான் மதுகலித் தென்ன வீங்கித்
தளர்கொதி வலியு முண்டாய்ச் சார்ந்திடு மிகவ ருத்தம்
மிளிர்மாற் கிழங்கை வாங்கி வெய்யசாம் பற்குட் டாழ்த்துத்
தெளிதர வவிந்த பின்னர்ப் பிசைந்ததைச் சிறுசூ டாக. (உசஎ)

அந்தக்கட் டிடைக்குங் காறு மருகாமல் வைத்துக் கட்டி
இந்தநற் கிழங்கு மத்தம் பிஞ்சிவை முன்போற் செய்தே
வந்தவக் கட்டின் மேவுங் கொதிவலி மாறிக் கள்ளஞ்
சிந்திடு மளவு மித்தைச் செப்பமாய்க் கட்டிப் பின்னர். (உசஅ)

இயம்பிடு குறிஞ்சி தன்னி லிலையைமெல் லிதாய ரிந்து
வயம்பெறு பொன்னி றம்போல் வறுத்துப்பக் குவமாய்க் கட்ட
வியந்தபுண் மாறு மென்று மிகுமரு ளறிவின் மிக்க
உயர்ந்தவர் சொன்ன நூல்க ளோதிடு முணர்ந்து கொள்ளே. ()

## கட்டிற்கு மருந்து.

கட்டிற்கு மருந்து சொல்வோங் காக்கணங் குறிஞ்சி வெட்பா
வட்டைமா தளைசம் பீரம் வண்புளி யிளந்த ளிர்க்கள்
இட்டமா மிவற்றி லொன்றை மிளகுட னவித்துக் கட்டி
வெட்டுவா யிடம றிந்து மென்மையாய் விவேகத் தாலே. (உருo)

கருவியால் வெட்டிப் பின்னுங் காரமேற் றிடுகன் மஞ்சள்
துருசிவை யெருக்கம் பாலிற் றுகளற வரைத்துப் புண்வாய்
பெருகிடு மதன்பின் முன்னர்ப் பேசிய விலைய வித்து
மருவிடக் கட்டச் சீயும் வடிந்துகட் டாறு மன்றே. (உருக

ஆறியே சீயு மின்றி யநுகிடி லதன்பின் முன்னர்க்
கூறிய காக்க ணத்தின் கொழுமிலை தெங்கி னெய்யில்
மீறிடா மற்பொ ரித்து மென்மையாய்ப் புண்ணிற் கட்ட
ஆறிடுந் தொடைவா ழைக்கட் டாதிய கட்டுத் தானே. (உருஉ)

## புண்ணிற் கிருமிகண்டாற் சிகிச்சை கிருமிநாசம்.

புண்ணிற்சீப் பாய்ச்சன் மேவிப் பொறுக்கருங் கிருமி கண்டால்
நண்ணு சம்பீர் முருக்கு நவில்புளி *மத்த மெல்லாம்

*மத்தம் - ஊமத்தை.

எண்ணூறு மிலைய வித்தே யியம்புமப் புண்ணை நன்றாய்
*மண்ணல் செய்தரிய சூடன் வளப்பெற வரைத்த தூளே. (உருங)

§கிருமிநா சனியா மென்று கிளத்துபச் சிலையின் சாற்றால்
வருமுறை யரைத்துப் பூச மாளுமே கிருமி யாவும்
தெரியுமிவ் வண்ண மாய்முன் செப்பினர் சிறந்தோர் யாரும்
உரியபேர் கிருமி நாச மென்றுரைத் திடலா மன்றே. (உருச)

## புண்ணிற்றுக்காரம்—பிளவை நாசம்.

பேசுறு பிளவை யாதி பெருங்கட்டு வகைக டம்மில்
மாசுறு சிவ ழிந்து வழிந்துநீர் கொண்டி ருந்தால்
ஆசுதீர் நன்ம ருந்தொன் றுரைகுவ மதனுக் கேற்கத்
தேசுறு மிரதங் காலே சிறந்திடு துருசொன் றென்ப. (உருரு)

பொன்னரி தார முக்கால் புகலுத்த மரைக்க மூஞ்சு
வன்முருக் கிலையின் சாற்றால் வழுவின்றி யரைத்துக் கொண்டு
சொன்னவப் புண்கி டங்கிற் றுகளிலா தேற்றிப் பின்பு
பண்ணுமோர் நாலு நாளும் பார்த்தந்தப் புண்ணின் வாய்தான்.

கரைத்திடா திருக்கி லந்தக் காரத்திற் சேர்ம ருந்து
பருத்திடுஞ் சதுரக் கள்ளிப் பாலினைக் கொஞ்சஞ் சேர்த்தே
வருத்திடு புண்ணி லேற்ற வருஞ்சீயு நீர்ப்பற் றெல்லாம்
கரைத்துவாங் கிடும தற்பின் காக்கணங் கொவ்வை யோடு. ( )

பாவட்டை குறிஞ்சி யல்லாற் பகரெலு மிச்சை யோடு
தாவரும் புளியி லுற்ற தளிரிவை தேங்காய்ப் பாலும்
ஆவலார் கழுநீ ருஞ்சேர்த் தரைத்திடு மஞ்ச டாலும்
மேவுற வரைத்துச் சேர்த்து மேதக நன்காய் வைத்தே. (உருஅ)

அந்நிறச் சந்தி புண்ணிற் கட்டியவ் விலைய வித்துப்
புந்தியாய்க் கழுவிப் புண்ணிற் பொலிந்திடு சீய்ப்பற் றெல்லாம்
சிந்தியொப் புரவாய்ப் புண்வாய் சிவந்துதான் கருகி வந்தால்
அந்தகல் லிலைக டம்மை யரிந்துதூ ளாக்கிப் பின்பு. (உருகூ)

---

*மண்ணல்செய்த-கழுவி. §கிருமிநாசனி-ஆடுதின்னாப்பாலை—நிலவாகை.
கிருமிவை பிடங்க ளெல்லாங் கிளர்தர விடைவி டாமல்
மருவிடப் பூச வந்தக் கிருமிகள் மாறிப்போகும் என்றும் பாடம்.

தெங்கினெய் சற்று விட்டுச் செப்புபோன் னிறம தாக
இங்கிதை வறுத்துப் புண்ணுக் கிசையவே கட்டி னுக்காற்
தங்குபுண் ணன்று யாறித் தழும்பதா மிதன்பேர் தன்னைப்
பொங்கிடும் பிளவை நாச மாமெனப் புகல லாமே. (உசுo)

## பற்பேத்தைக்கட்டின் குணமும் மருந்தும்.

கொதிவலி மிகவு முண்டாய்க் கூறிடுந் திரட்சி யாகி
அதிகவே தனைப்ப டுத்தி யதனாலே சரீரந் தன்னில்
கொதியுண்டாய்ச் சிரசிற் காதிற் குத்துடன் வாய்தி றக்க
விதனமாய்க் கதுப்புத் தானு மிகவுமே வீங்கு மாகில். (உசுக)

உரைப்பர்பற் பேத்தைக் கட்டென் றுபாயமாய்க் கருவியாலே
கருத்ததாய் வெட்டி யுள்ளிற் கள்ளநீர் தன்னைப் போக்கி
விரைப்படி மிளகு முப்பு மரைத்தந்த வெட்டு வாயில்
நிரைப்படப் பூசி யேவெந் நீரைக்கொப் பளிக்க யாறும். (உசுஉ)

## பற்பொடி.

எருக்கம்பா லொருபங் காகு மிருபங்காம் பராய்ம ரத்தின்
உருக்குப்பா லிவற்றி னாலே யுவர்க்க டலுப்ப ரைத்துப்
பெருத்திடு மாத பத்திற் பேணியே காய வைத்துக்
கருத்துறப் பழுத்தேங் காயிற் கண்ணுடைத் திளநீர் தள்ளே.

அதற்குழ னரைத்த வுப்பை யள்ளியிட் டாப்ப டைத்து
விதித்தமண் சீலைசெய்து விளம் பிய புடத்திற் போட்டுப்
பதித்தவச் சிரட்டை நீறும் பதத்தினி லெடுத்த ரைத்து
மதித்துவைத் தெடுத்துக் காலை வளர்தந்த சுத்தி செய்ய. ( )

பல்வலி குத்தி னோடு பகர்தரு முளையே யின்னம்
சொல்லிய முரசு தன்னிற் றுகளுறு கரைவு தானும்
புல்லுபல் லிலவே யாதி போகுமிம் மருந்து போலப்
பல்லினோய் வெல்ல வேறு பக்குவ மருந்தொன் றில்லை. (உசுரு)

o ஆதபம்-வெயில்.

## செங்கரப்பன் கட்டிற்குச் சிகிச்சை.

காதடி யுச்சி சந்து கழுத்தடி முதலா மற்றும்
ஓதிடு வன்மத் தானத் துறுபச்சைப் பால ருக்குத்
தீதுசேர் கட்டெ ழுந்து சிவக்கில்விற் புருதி யென்பர்
சாதுவா மருந்தி தற்குச் சாற்றுவன் சிவனார் வேம்பு. (உசுசு)

வேம்பினிற் பட்டை செங்கத் தாரிவேர் சிவந்த சந்தம்
வேம்பாடல் கரிய சீரம் விளம்பிடு மசம தாகம்
ஓம்பிடு வசம்பீ தோரொன் றொருநகமுஞ் சவுரிச் சாற்றால்
சோம்பிலா தரைத்த பின்னர்ச் சொல்லுகா ணுழி யாக. (உசுஎ)

ஏரண்டத் தயிலம் விட்டே யிதைக்காய்ச்சி மெழுகென் றோதும்
சீரிய பதத்தைப் பார்த்துச் செவ்வையாய் வடித்து வீக்கம்
ஆறுறு மிடத்திற் பூசி யறைகடுக் காய்க ருத்தச்
சீரக மணித்தக் காளி சிறந்தசெம் பரத்தம் பூவும். (உசுஅ)

சரியாகக் குடிநீர் காய்ச்சித் *தாலநற் கட்டி சேர்த்தே
உரியவப் பாலர்க் குள்ளுக் கூட்டினால் மாறு மென்ப
எரியுறு செங்க ரப்ப னுதிய வியங்கம் வேரிற்
புரியெண்ணெய் பூசி னாலும் போய்விடு முண்மை யாமே. (உசுகூ)

## நகச்சுற்றிற்கு.

வெட்டலாற் கால்கை யூறு மிகுநகச் சுற்றினாலே
தட்டிடு கொதிப்பே யாதி சார்ந்திடி லுப்பு மஞ்சள்
மட்டதா யரைத்து நீரில் வளமுடன் கரைநீ வைத்தே
சுட்டிட வெடுத்துச் சீலை தோய்க்கக்கட் டாறு மன்றே. (உஎ0)

## வெட்டுக்காயத்திற்கு.

வெட்டிற்குக் கர்ப்பூ ரத்தில் வெறிமலி சாரா யத்தை
விட்டரைத் ததிலே போட்டு மெல்லிய சீலைத் துண்டாற்
கட்டிமே லற்ப மாகச் சாராயங் கவிழ்த்து விட்டால்
எட்டுநாட் குள்ளே மாறு மீதுகை கண்ட தாமே. (உஎக)

---

* தாலநற்கட்டி-பனங்கட்டி.

## நாசிகாபிடத்திற்கும் சபாலக்குத்திற்கும்.

சேங்கொட்டை முகத்தைச் சிவித் தீயினில் வாட்டப் பால்வந்
தோங்கிடு மதனைச் சீலை யூட்டித்தேற் றாவின் வித்தைப்
பாங்குற மெலிதாய்ச் சீவிப் பகர்சீலைக் குட்பொ திந்து
வீங்கிடா திறுகச் சுற்றி விழைபசு நெய்பிற் றோய்த்தே. (௨௭௨)

எரியினைக் கொளுத்தி யூத விரும்புகை குழலால் வாங்கச்
சொரிநாசி காபீ டந்தான் றொலைந்திடு மிகுநீர் சிந்திப்
பரிகபா லக்குத் திற்குப் பண்ணியிப் படிநல் லெண்ணெய்
மருவிடத் தலைக்கு வைக்க மாறிடுஞ் சாது வாக. (௨௭௩)

## சஞ்சீவித் தயிலம்.

ஏரண்டத் தயிலத் தோடே யின்மணித் தக்கா ளிச்சா
றேரொன்றோர் நாழி கூட்டி யுறுமுறை யாகக் காய்ச்சிப்
பார்மெழு காம்ப தத்திற் பதனமாய் வடித்தா றுமுன்
சேர்பெறு நால்வ ராக னிடைகோரோ சனைத்தூள் தூவே. ()

தூவியே யோர்நாள் விட்டுத் துய்த்திடும் வகையைக் கேளு
மேவுற வோர்க ரண்டி விடியற்கா லத்தி லுண்டே
பாவனை யாக விச்சா பத்தியத் துடனே யெண்ணெய்
ஓவற மண்ட லந்தா னுண்டிட வொழியு நோய்கேள். (௨௭௫)

மூலத்தில் வெட்டை பித்த முதிர்வயிற் றுக்க டுப்புக்
காலனே ரென்பு ருக்கி கயம்பெரும் பாடு காந்தி
மேலுநீ ரிழிவு டற்புண் மிக்கவக் கரப்புண் போகும்
வாலையா முடலுந் தேறும் வலுவுண்டா மிரும லும்போம். ()

கண்முத லங்க மெல்லாங் கவின்பெறக் குளிரு மிக்க
புண்கணைக் காய்ச்சல் மேகம் போய்விடும் பேதி யாகும்
எண்ணுறு சிறுவ ராதி யெவர்களும் புசிக்க லாகும்
தண்மைசே ரிதன்ற னாமஞ் சஞ்சீவித் தயில மாமே. (௨௭௭)

பிள்ளைக்கற் றாழைச் சாறு பேசிய விதியே விட்டு
எள்ளலின் முன்னே சொன்ன வியல்பதாய்க் காய்ச்சி யுண்டால்
பிள்ளைக ளாதி யாகப் பெரியவர் தமக்கு மாகும்
விள்ளவே முடியா திந்த மேம்படு மவிழ்த நன்மை. (௨௭௮)

## கயரோக நிதானம்.

கண்டமு நெஞ்சுங் காய்ந்து கண்ணுறு முட் குழியு நீடி
அண்டிடு காலை மாலை யருள்சுரந் தோன்றிக் கூறும்
மிண்டிய விருமல் மிஞ்சி வெகுநாளாய் நிற்கி லீது
கொண்டிடு கயரோ கந்தான் கூறுநன் மருந்து கேண்மோ. ( )

## சிகிச்சை.

வருபரி பூர ணத்தை வழங்குசஞ் சீவி யோடு
திருநிறை கடுக்கா யேநற் சீரக மாமிப் பேர்கள்
மருவுசூ ரணத்தி னோடு சஞ்சீவித் தயில மற்றிவ்
வரியநல் லவிழ் தத் தொன்றை யருந்துமண் டலத்துக் கம்மா. ( )

மண்டல மருந்து தின்ற வகைகேளு சீனி சேர்த்தே
உண்டவப் பத்து நாளுக் கொருமுறை வில்வா திப்பேர்
கொண்டநற் றயிலம் வைத்து முழுகிடக் குறையும் பின்னர்
அண்டியே நிற்கி னல்ல வவிழ்தத்தை யறைய லுற்றும். (௨௰௧)

## கயசிந்தாமணி நெய்.

*கேள்சிறு கீரை சீதை கிளர்நெல்லி முசுமு சுக்கை
தாளிவல் லாரை கையான் றகரை யாவரை மணித்தக்
காளிதூ துளைப ருத்தி கற்றாழை துளசி யேமா
தாளியே பிரமி சாத்தா வாரியோ ரிதழின் கஞ்சம். (௨௰௨)

செங்கழு நீரி னோடு செய்யநல் லாம்பல் சீதம்
தங்குதா மரைநற் றண்டிற் சார்கிழங் கிவைக டம்மிற்
பங்கமில் சாற்றி னோடே பசுவின்பா லிளநீ ரொவ்வொன்
றங்கொரு நாழி யாக வளவதாய்க் கூட்டிக் கொள்ளே. (௨௰௩)

அரியவிச் சாற்றி னோடே யறைநீற்றுப் பூசி னிக்காய்த்
தருசாறு நான்கு நாழி தக்கநற் பசுவி னெய்யும்
இருநாழி யாகக் கூட்டி யிசைபெரும் பாண்டத் திட்டு
விரைவுட னடுப்பி லேற்றி வேர்வகை விளம்பக் கேளே. (௨௰௪)

---

* கேள்சிறுகீரை கீழ்காய்நெல்லியே என்றும் பாடம்.

வெட்டிவேர் சிறுகாஞ் சோன்றி மிளிர்கோரை கண்டங் காரி
வட்டாடா தோடை தூது வளைபிலா மிச்சை சிற்று
முட்டிநா யுருவி சிந்தின் முள்ளிநன் னாரி பேரா
முட்டிகிழ் காபி னெல்லி மொழிகொடிப் பாலை யத்தி. (உ அரு)

சிறுபூளை விண்டு காந்தி சேரொன்று கழஞ்சு நான்காய்
மறுவின்றிக் கொண்டி டித்து வருபுதுப் பாண்டத் திட்டே
நறும்புனல் படியீ ரெட்டு விட்டிரு நாழி யாகக்
குறுகிடப் பிழிந்த நீரைக் குணமதாய்க் கூட்டிக் கொள்ளே. ()

அருத்திசேர் சரக்கு நாகம் பூவுட னமரர் தாரு
உரைத்தசீ ரகமி ரண்டோ டுயர்ந்தசிற் றேல மேபே
ராத்தைதேற் றாவின் கொட்டை யரியவெட் பாலை யேசிற்
றரத்தைதிப் பிலியின் மூல மருஞ்சந்தஞ் சிறுதேக் காமே. ()

சாதிபத் திரியே தாளி பத்திரி கராம்பு மஞ்சள்
ஓதுவான் மிளகு கோட்ட முருகூகை நீறு மாஞ்சில்
தீதின்முப் பலைபே ரீஞ்சின் றீங்கனி யிருப்பைப் பூவும்
ஏதின்முந் திரிகை தன்னி னிரும்பழ மிவைக ளெல்லாம். (உ அசு)

வகையொவ்வொன் றிருக ழஞ்சு வளம்பெறக் கூட்டிப் பின்னர்
மிகையிலா திடித்துத் தெள்ளி விருத்தமாம் பாண்டத் திட்டே
தொகுமீரெண் படிநீர் விட்டுச் சொல்லிரு படியாய்க் காய்ச்சித்
தகுமுறை பிழிந்து கூட்டிச் சால்புடன் கொதிக்கச் செய்யே. ()

இப்படிக் கொதிக்கச் செய்தே யியல்பொடு நான்கா நாளிற்
செப்பிய மெழுக தென்னுஞ் சீர்பெறு பதத்தைப் பார்த்துத்
தப்புநே ராம லொன்றுஞ் சால்புற வடித்த பின்னர்
மெய்ப்படு சிறுசூ டான வேளைபிற் குங்கு மப்பூ. (உ கூ0)

பச்சைக்கர்ப் பூர மிந்து பகர்கோரோ சனைதா னெல்லாம்
நச்சியொவ் வோர்க ழஞ்சு நலமுறப் பொடித்து விட்டே
அச்சமில் லாம லுண்டா லதனமா நன்மை சாரும்
இச்சைய திவைகள் சேரா தியற்றினு மியல்ப தாமே. (உ கூக)

வடித்திடு மூன்று நாளில் வளம்பெறு கரண்டி தன்னால்
எடுத்துநற் சீனி தன்னை யிசையனு பான மாகக்

கொடுத்திடா யக்நி சந்தி கூறுமண் டலத்துக் காகும்
படுத்திடு தொன்ணூற் ருறு கயம்பாறு சலரோ கம்போம். ()

ஆறுமே மூல வெட்டை யக்கரம் பாண்டு வீக்கம்
ஊறுசேர் தீர்க்க டுப்போ டுட்டணங் கோழை தாகம்
பாறிடு மீழை யோடே பயித்தியம் பழஞ்சு ரம்போம்
கூறிடு வழலைக் கட்டுக் குலைபுகெஞ் சடைக்கும் வாதம். (உகு)

பகரிலிம் மருந்த ருந்தும் பத்துநாட் கொருக்கா ளியும்
நிகரிலா மருந்துண் ணுமை னேர்பெறு சந்த ளுதி
தகைவிலாச் சிறிய சந்த ளுதியே சிற்று முட்டி
புகரிலிவ் வெண்ணெய் மூன்றிற் புகலொன்றை யினிமை யாக. ()

இயம்பிய முறைய தாக வேர்பெறச் சிரசில் வைத்தே
நயம்பெற முழ்க வேண்டு நவையிலா திக்த வண்ணம்
வியந்திடு முனிவர் சொன்னார் விரும்பித னும மோதில்
கயந்தனைத் துரத்து கின்ற கயசிந்தா மணிசெய் யாமே. (உகரு)

## நீரிழிவுக் குணம்.

தாகமே யதிக மாகித் தளர்ந்துநா வுலர்ந்து மிக்க
சோகமாய்க் கிறுகி றுத்துத் தொடர்ந்துகை காலுஞ் சோர்ந்தே
ஏகமாய்ப் பகலு மல்லும் விடாதுநீ ரிறங்கு மன்றி
மோகமாய் மழைப னிக்கு மூதிர்ந்திறங் கிடுஞ்ச லந்தான். ()

துனியுறக் களையுண் டாகுந் தோமில்போ சனம்வெ றுக்கும்
நனிவயி றெரிவுண் டாகு நாட்கழிக் திடுகிற் றேகம்
இனிவெளுத் தாளும் வற்று மிருசெவி யடைத்து நிற்கும்
தினகலி சலரோ கத்தின் றீக்குண மிதுவென் றூரே. (உகள)

## சிகிச்சை.

மிஞ்சுமூ னிக்நோய் தீர விளம்புது மருந்து கேளு
சஞ்சிவிச் சூர ணங்நோய் தணித்திடுங் கபாட மாத்ரை
செஞ்சவே யனுபா னத்திற் சேர்த்தருந் திடுவாய் மூழ்கிம்
பஞ்சசீ தத்தி னெண்ணெய் பரிவுடன் வைத்து மூழ்கே. (உகஅ)

மருவிலிம் மருந்தி னாலே மாறிடு மாறு தாகில்
உறுசல ரோகத் தாலே யுணர்வழிந் திட்ட பேர்க்குக்
குறைவற விரணந் தீர்த்துக் குற்றுயிர் தருமருந்தொன்
றறைகுவ னதனை யாரு மன்புட னினிது கேண்மின். (உகசு)

## சலரோக சஞ்சீவிநெய்.

அத்தியோ டுதிர வேங்கை யாவரை யரசு வெள்வேல்
இத்திபூ வரசால் பூலா விருவிளா வொடுவ டக்கி
நத்தலில் விடத்த னுவல் நறுவிலி *ருஞ்சி யேசெங்
கத்தாரி மருதின் பட்டை கருதொரு பலம்வ கைக்கே. (ங0)

இடியெல்லாந் தூள தாக்கி யிருபத்து நான்காய்ச் சொல்லும்
படிபுனல் விட்டி ரண்டு படியாகக் காய்ச்சி நன்காய்
வடிகொண்ட பின்னர்க் கேளு வல்லாரை பொன்னாங் காணி
கடிமுசு முசுக்கை யேகீழ் காய்நெல்லி நெருஞ்சி கையான். (ஙக)

ஓரிதழ்க் கஞ்சத் தோடே யுற்றவா வரையி வற்றின்
சீரிய விலவா ழைப்பூச் செம்பரத் தம்பூச் சாத்தா
வாரிசெங் கழுநீ ராம்பல் வாழையே கருணை யல்லால்
கோரைதா மரைநி லத்திற் கொழும்பனை யிவற்றின் °கந்தம். ()

வெள்ளரி நெல்லி தாழை விரும்புமா தளையி வற்றின்
கள்ளமில் காய்கற் றாழை கரும்பொடு கோவை சீந்தில்
தள்ளருந் தண்டி வற்றின் சாறுக ளிளநீ ரான்பால்
மெள்ளவே வகையொவ் வொன்று விளம்பரை நாழியாமே (ஙங)

வெட்டிதூ தூளை நன்னாரி யிலாமிச்சு வில்வஞ் சிற்ற
மட்டியே யாடா தோடை வண்*சாயஞ் சிவதை பேர
மட்டிநா யுருவி யல்லான் மன்னிய நத்தைச் சூரி
தட்டிலா விவற்றின் வேருந் தருவிளா நற்பே ரீஞ்சு. (ஙச)

முந்திரி யிவற்றி னல்ல முதிர்ந்திடு பழத்தி னோடே
நந்துமுள் ளிலவி னுற்ற நறும்பிசின் வகையொவ் வொன்றும்
சிந்திடா நாற்க முஞ்சு சிற்றேலங் கன்னார் கோட்டம்
கந்தமார் சாதிக் காய்பூக் களங்கமி னாகம் பூவும். (ஙரு)

---

*ருஞ்சி - கடலிருஞ்சி. ° கந்தம் - கிழங்கு. *சாயம் - சாயவேர்.

திரிகடு கசம தாகஞ் செவ்வள்ளி சிற்ற ரத்தை
கருதிரு சீர கந்தற் கராம்பொடு கடுக்காய்ப் பிஞ்சு
தருசின மிருப்பை யின்பூச் சாதிபத் திரியும் வண்பொன்
னரிதாரஞ் சாதி லிங்க மதிமது ரம்வேம் பாடல். (௩௦௬)

அரியசந் தனத்தக் கோல மடவிகச் சோலம் வாசம்
மருவில வங்கப் பட்டை வகையிரு கழஞ்சு தூக்கிப்
பரிவுற் விடித்தி ரெட்டுப் படிபுனல் விட்டு வற்றி
இருபடி யாகக் காய்ச்சி யெல்லா மொன்ருகச் சேரே. (௩௦௭)

ஆவினெய் யிரண்டு நாழி யதுவுஞ்சேர்த் தடுப்பி லேற்றித்
தாவற மூன்று நாளுந் தழலிடைச் சிறுகக் காய்ச்சி
மேவுற நான்கா நாளில் மெழுகெனும் பதத்தின் முக்கட்
தேவனை வணங்கி நல்ல தினத்தினில் வடித்தா ருமுன் (௩௦௮)

குங்குமப் பூவிந் துப்புக் கொளுங் கோரோ சனையி னோடே
புங்கநல் வாசப் பச்சைப் பூரமே யோர்க ழஞ்சாய்
மங்குறு வகைதூ ளாக்கி மாசுநீர் நெய்க்கு ளிட்டே
பொங்கிய தினந்தான் மூன்று போயபின் புசிக்கக் கேளே. ()

மருவுறச் சீனி சேர்த்து மண்டலங் காண்டி யுண்டாற்
பரிசல ரோக மெல்லாம் பறந்திடு மென்பு ருக்கி
பிரமேக மிருபத் தொன்று பெரும்பாடு நல்ல டைப்புக்
கிருச்சினம் வெள்ளை வெட்டை கிறுகிறுப் புடற்பு ணின்னும். ()

கயரோக மூல ரோகங் கைகாலை முடக்கும் வாதம்
சயமுறு கோழை யாவுந் தவிர்ந்திடு மாத ருக்கு
நியமமாய் வரட்சி நீங்கி நிகரிலாக் கருப்ப முண்டாம்
அயர்வுட னிருது வில்லா வரிவையு மிருது வாவாள். (௩௧௧)

சதிசல ரோகந் தீர்க்குஞ் சஞ்சீவி நெய்யி தன்பேர்
பதனமா யந்தி சந்தி பத்துநா ளருந்தி யப்பால்
விதிமுறை பதினே ராநாள் விட்டருஞ் சந்த னாதி
அதிசிறு சந்த னாதி யமுதசா கரமா மெண்ணெய். (௩௧௨)

சொல்லுமிவ், வெண்ணெ யொன்றைச் சுகம்பெற வைத்து மூழ்கி
வெல்லவே முற்ற நாளின் மீளவு செய்பு சித்து

வல்லைபி லிந்த வண்ண மண்டல முண்டா யானால்
ஒல்லைபிற் சலரோ கம்போ மொடுங்கிய மேனி தேறும். ௱௧௪)

## பஞ்சசீத எண்ணெய்.

*பஞ்சசி தத்திற் சாறு பாலெண்ணெ யிளநீ ரெல்லாம்
மிஞ்சவொன் றெவ்வோர் நாழி விட்டுச்சீ ரகமி ரண்டு
செஞ்சுழுப் பலைக டாமுஞ் சேரொன்று கழஞ்ச ரைத்துக்
கொஞ்சமாய் மூன்று நாளுஞ் சிறுகொதி கொதிக்க விட்டே. ()

மற்றநாள் வடித்து வைத்து மூழ்கினல் வரட்சி மேகம்
உற்றகண் ணெரிவு மூல ரோகங்கை யெரிவு தாகம்
முற்றுங்கா லெரிவு பித்த முதலிய வேகுங் குற்றம்
அற்றகப் பஞ்ச சீத வெண்ணெயென் றறைபி தன்பேர். ()

## வில்வாதி யெண்ணெய்.

வில்வவேர் பட்டை போக்கி வயிரத்தை விரைந்தெ டுத்தே
மல்லல்சேர் மலாக்காச் சந்தம் வகையொரு பலமே தூக்கி
மெல்லிய நூள தாக்கி மேவவெண் படிநீர் விட்டுச்
சொல்லவோர் படியாய்க் காய்ச்சித் துகளற வடித்த தோடே.

பலைமூன்று கடுகு மூன்று பகர்த்தசீ ரகமி ரண்டு
நலவகை கழஞ்சி ரண்டு நன்றாக வரைத்துச் சேர்த்தே
0திலவெண்ணெய்படிதான்விட்டுத்திரிநாளுங்கொதிக்கச்செய்து
வலமுறை நான்கா நாளில் வருமெழு கெனும்ப தத்தில். (௱௧௭)

வட்டிலிற் றாழம் பூவின் மடலினைப் பரப்பி நன்றாய்க்
கிட்டியிட் டந்த மாக்கிக் கிளர்ந்திட வடித்த வெண்ணெய்
தட்டில்வில் வாதி யென்று சார்ந்தநற் பெயருஞ் சாற்றித்
திட்டமாய் வைத்து மூழ்கிற் றீர்ந்திடும் வியாதி கேளே. ()

தீருமே கைகால் காந்தல் செறிந்திடு மிருமல் பித்தம்
பேருமே மேக வெப்புப் பெருகிய கயமே காந்தி
சாருறு கபால வெப்புத் தழன்மூல மற்று நோய்கள்
சோருமே யென்று சொன்னார் துகளறு முனிவர் தாமும். (௱௧௯)

---

* பஞ்சசீதம் - பொன்னாங்காணி, சிறுகீரை, ஆவரை, சீந்தில், வல்லாரை என்பன. 0 திலவெண்ணெய் - எள்ளெண்ணெய்.

## தாழங்காயெண்ணெய்.

நன்னாரி கோரைக் கந்தம் நவிலிலா மிச்சு வெட்டி
மன்னுமீர் முட்டி மேவும் வளம்பெறு வேரி னோடு
பன்னுமீ ராத்தை தேவ தாருபச் சிலைகச் சோலம்
வன்னமார் மாஞ்சி லோடு மரமஞ்சள் மஞ்சள் கோட்டம். (கஉ0)

சந்தனக் நறும்பி சின்*னற் சதகுப்பை சிற்றே லந்தான்
அந்தரா மதுர மெல்லா மாய்வகை கழஞ்சி ரண்டாய்
வந்திடக் கூட்டி நன்று யிடித்துவன் பாண்டத் திட்டே
உந்துநீர் படியெட் டிட்டே யோர்படி யாகக் காய்ச்சி. (கஉக)

வடித்தெடு நீரி னோடே வளர்தரு தாழம் பிஞ்சை
இடித்தெடு சாறி ரண்டு நாழியும் பசுப்பா லுழி
வடித்தவி ரெள்ளி லெண்ணெய் வருமொரு நாழி கூட்டிப்
படிக்குநான் முறைவ ழாமற் பகர்தரு கஷாயஞ் செய்தே. (கஉஉ)

செப்பிய மூன்று நாளுஞ் செவ்வையாய்க் கொதிக்கச் செய்தே
அப்புற நான்கா நாளி லநமெழு கெனும்ப தத்தில்
துப்புறு தாழம் பூவின் றுகளறு மடலை வட்டில்
ஒப்புறப் பரப்பிக் கிட்டி யுறப்பூட்டி வடித்தக் நேரம். (கஉங)

இந்துப்பீர் கழஞ்சு நாளா யியல்பொடு தூவி யேபின்
அந்தமாய்ச் சிரசில் வைத்தே யடுத்தநாட் டானும் வைத்துப்
புந்தியாய் மூழ்கி னுக்காற் போகுநோய் புகலக் கேளு
முந்துமுட் காய்ச்சல் கைகால் முடக்குக்கண் ணெரிவு மூலம். ()

இருமல்கண் பசாடு மேக மிருபத்து நான்குங் கைகால்
எரிவொடு கயங்க பால மியம்பரும் வரட்சி யாதி
இரவிமுன் பனிபோற் போகு மியம்பலா மிதன்றன் பேரைச்
சருவிய நோய்க டீர்க்குந் தாழங்கா யெண்ணெ யென்றே. ()

## சிற்றுமுட்டியெண்ணெய்.

பாரிலுள் ளோர்கள் போற்றும் பகர்சிற்று முட்டி யெண்ணெய்
ஏர்பெற யாமு ரைக்க வினிதுட னெவருங் கேண்மின்

---

* நார்-என்றும் பாடம்,—நார்=கல்நார்.

சோர்விலாச் சிற்று மூட்டி தோற்றுவேர்த் தோல்ப லந்தான்
ஓரொரு பத்து வாங்கி யுறுசலம் பதக்கு விட்டே. (௩௨௬)

இருபடி யாக வற்ற வெரித்ததைப் பிழிந்த சாற்றோ
டரியவெள் ளெண்ணெ யான்பா லறையுநாய்ப் பாகற் சாறு
தருசாத்தா வாரிச் சாறு வெண்சீந்திற் றண்டிற் சாறு
கருதிய தெங்கி லேநீர் காண்கிற குரும்பைச் சாறு. (௩௨௭)

வகைபடி யொன்றெ டுத்து வண்புதுப் பாண்டத் திட்டே
தகவுட னடுப்பி லேற்றிச் சாற்றுசிற் றரத்தை *முக்காய்
புகரில்சந் தனம்பீ நாறி புகுமர மஞ்சள் குக்கில்
தருமதி மதுர மோடு சார்ந்திடு மிவையோவ் வொன்றும். ( )

ஓரிரு கழஞ்சு தூக்கி யோதுநாய்ப் பாகற் சாற்றில்
சீருற வரைத்து முன்னர்ச் செப்பிய கஷாயந் தன்னில்
ஏருறக் கரைத்தே பின்ன ரியம்புநான் முறைவ பூமல்
பாரொரு மூன்று நாளும் பக்குவ மாகத் தானே. (௩௨௯)

அளவதா யனலா றும லாகச்செய் தடுத்த நாளில்
உளமகிழ் மெழுக தென்றே யோதிய பதத்திற் காய்ச்சித்
தெளிவதாய் வடித்த வெண்ணெய் செய்திடுங் குணங்களெல்லாம்
எளிதல்ல வுரைக்கத் தேவ ரியம்புவ ரிதனின் மேன்மை. (௩௩௦)

பிதற்றிடும் பயித்தி யத்தாற் பேய்கொண்டு திரியும் பேர்க்கு
விதித்திடிவ் வெண்ணெய் தன்னை மிகாவகை சிரத்திற் றப்ப
மதித்துவைத் தடுத்த நாளு மளவொடு வைத்துக் கண்ணுட்
பதித்திட விட்டு நெல்லிக் காய்சிறு பயற ரைத்தே. (௩௩௧)

எலுமிச்சம் புளியுங் கூட்டி யினிமையாய்த் தப்பி மூழ்கி
நிலைமையாங் குளிர்மை யுற்ற போசன மருந்த நீங்கும்
உலைவுறு மலட்டு பித்த மிதன்பெய ரொருகாற் கூறில்
விலகுமே சுடரைக் கண்டு விட்டோடு மிருளே போல. (௩௩௨)

மூலங்கண் வலிக பால முதிர்தரும் வரட்சி தொய்வு
மேலுறு பயமே யாதி விளம்பிடு ரோக மெல்லாம்

* முக்காய் - கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்.

சீலமா மிதன்பேர் சொல்லத் தீர்ந்திடும் வைத்து மூழ்கக்
கோலமார் குணத்தை யெம்மாற் கூறுதற் கெளிய தாமோ. ( )

## அமுதசாகரவெண்ணெய்.

சந்தனம் பலமி ரண்டு சார்வில்வ வேருந் தோனீத்
தந்தகல் வயிரந் தானு மறையிரு பலமே சிவிச்
சிந்திடாதிடித்துத்தெள்ளிச் செவ்வையாய்ப் புதுப்பாண்டத்தில்
நந்தலி னான்கு நாழி சலம்விட்டு நலம தாக. (கூகச)

அடுப்பினி லேற்றிக் காய்ச்சி யஃதொரு படியாய் வற்ற
வடித்திடு நீரிற் சேர்க்கும் வகைகேளு மகிழ்ந்து நீயும்
நடத்திரு முட்டி வெட்டி நன்னாரி யிலாமிச் சோடே
அடுத்திடு மழுக்கி ராவே ராம்வகை நாற்க மூஞ்சே. (கூகரு)

சேர்த்திடு நவபாண் டத்திற் றிருத்தமா யிட்டு நீரும்
பார்த்திரு நான்கு நாழி பழுதின்றி விட்ட வித்துப்
பேர்த்தொரு படியாய் வற்றப் பிழிந்துமூற் கஷாயத் தோடே
சேர்த்திரு சீர கந்தான் செப்புமீ ரரத்தை யோடே. (கூகசு)

திரிபலை கடுகு மூன்று செஞ்சந்தந் தேவ தாரு
வருசமுத் திராப்பேர்ப் பச்சை வளர்சிறு தேக்க தெல்லாம்
தரும்வகைக் கிருக மூஞ்சு தானெடுத் திடிபாண் டத்தில்
வரைவுட னிட்டு நீரும் வாரெட்டுப் படிய தாமே. (கூகஎ)

ஒருபடி யாகக் காய்ச்சி யுற்றதைப் பிழிந்து முன்னர்த்
தருகஷா யத்திற் கூட்டிச் சாறுகேள் பொன்னாங் காணி
சருகிலா வரை மொசுக்கை தந்தவிம் மூன்றிற் சாறு
திருசிறை சீந்திற் றண்டு செப்பிய சாத்தா வாரி. (கூகஅ)

தெங்கினல் லிளநீர் தோன்றும் பருவத்திற் குரும்பை செப்பும்
மங்கலிற் றூழம் பிஞ்சோ டருநெல்லிக் காய்சம் பிரந்
தங்கிய பழமே பிள்ளைக் கற்றாழை தாளிச் சாறும்
பங்கமில் பசுவின் பாலு மிளநீரும் பகரொவ் வொன்று. (கூகக)

காற்படி யாகக் கூட்டிக் கழறுமுற் கஷாயத் தோடே
தேற்றமாய் விட்டெள் ளெண்ணெய் சேரொரு படியே மூன்று

பாற்படு நான்கு நாளுஞ் சிறுகொதிப் பருவ மாகத்
தோற்றிடச் செய்து நான்கா நாளினிற் றுகளு றாமல். (௩௫௰)

எரித்துநன் மெழுக தென்றே யியம்பிய பதத்தி லேதான்
மருக்கிளர் தாழம் பூவின் மடல்வட்டி னிற்ப ரப்பி
நருக்கியே வடித்த வெண்ணெய் நவிலுநன் முறைய தாகச்
சிரத்தினில் வைத்து மூழ்கத் தீர்ந்திடும் வியாதி யெல்லாம். ()

கயரோக மூல ரோகங் கபாலமே சலரோ கம்பின்
நயனமா றுரோக மோடு நவின்மேக ரோகந் தாகம்
பயமான வெட்டை ரோகம் பயித்திய முடல்வ ரட்சி
தயவிலாப் பற்குத் தோடு சாற்றிடு மனேக நோய்கள். (௩௫௨)

இரிந்திடுங் கோடைக் கீதே யல்லது சுகத்தி னோடு
வருமின்ப முற்று நல்க வளமுள மற்றொன் றில்லைப்
பொருந்திய மழைப னிக்குப் *பொருத்தியே யிருக்க லாகா
அருஞ்செய லெண்ணெய் நாம மமுதசா கரமா மன்றே. (௩௫௩

## சன்னிவாதசுரத்தெண்ணெய்.

எருக்கலை வேரின் சாறு நாழி யிலைப றுத்தி
நருக்கிய சாறு மூன்று நாழிநற் சம்பீ ரத்தின்
விரைக்கனிச் சாறு தானும் விளம்புமொன் றரையா நாழி
சுருக்கமி லெள்ளி லெண்ணெய் சொல்லொரு நாழி யாமே. ()

சன்னிய ஞய ஞெச்சி சாரணை மாவி லங்கை
நன்னாரி குமிழ் கிரந்தி நாயன் †சாய்க் கோரை வட்டுப்
பன்னைநா யுருவி *மல்லி ○பரிவாலி சிவனார் வேம்பு
கன்முரி சவுரி தூதி திராய்நான்மை நத்தைச் சூரி. (௩௫௫)

இருவேலி யமுக்கி ராவிர் முட்டி *லா மிச்சு வாயே
பெருமருந் தாம ணக்குப் பெருமபிற் குருந்தி னோடே
வருமாடா தோடை வேர்கள் வகைக்குநாற் கழஞ்சு கூட்டித்
தெரிவுற விடித்துத் தெள்ளிச் சேர்புதுப் பாண்டந் தன்னில். ()

---

* பொருத்தியிருத்தல்-தலைக்குத் தைலம்வைத்து நெடுநேரமிருத்தல்.
† சாய்க்கோரை-சந்தனக்கோரை. * மல்லி-சிற்றுமல்லி.
○ பரிவாலி-துகிரைவாலி. * இலாமிச்சு வாய் எனப் பிரிக்க.

ஈரெட்டுப் படிநீர் விட்டே யியம்பொரு படியாய்க் காய்ச்சிச்
சீரிட்டு வடித்தெ டுத்துச் செப்புமுற் கஷாயத் தோடே
பேரிட்ட சரக்குச் சொல்வோம் பிழையிலாக் கெடுகு மூன்று
சேரிட்ட சாதி யின்காய் திகழ்த்துசீ ரகமி ரண்டே. (கூசஎ)

வசுவாசி கராம்பு கோட்டம் வானவர் தாரு வள்ளி
அசமோத மீர ரத்தை யகிலில வங்கப் பட்டை
வசம்பேலங் கடுகு ரோணி மஞ்சள்பச் சிலைவெ ளுத்தற்
பிசினதி மதுரஞ் சாலி பெருமர மஞ்சள் சந்தம். (கூசஅ)

வெந்தயங் கணித வேதி விளாவிலனு மரிசி மேன்மை
தந்தவா லுளுவை யோடு சார்சத குப்பை யெல்லாம்
சிந்திடா வகையொவ் வொன்று சேரொரு கழஞ்சு தூக்கிப்
புந்தியா யிடித்துத் தெள்ளிப் புதுப்பாண்டந் தன்னி லிட்டே. ()

புனல்படி யீரெட் டிட்டுப் புகவொரு படியாய்க் காய்ச்சி
நினைவதாய் வடித்து முன்னர் சேர்கஷா யத்திற் கூட்டிக்
கனமுட னடுப்பி லேற்றிக் களங்கின்றி யினிதாய் மூன்று
தினமுமே கொதிக்கச் செய்து செப்பிய நான்கா நாளில். (கூரு)

வற்றிட வெரித்து நன்றாய் வருமெழு கெனும்ப தத்திற்
சற்றுமே தவரு வண்ணஞ் சடுதியாய் வடித்திந் துப்புச்
சொற்றவோர் கழஞ்ச ரைத்துத் தூவிமேற் பொடியாய்ப்பின்னர்
உற்றநற் பாண்டந் தன்னி லுவந்துவை காற்று ருமல். (கூருக)

வைத்துநான் மூன்றொ டொன்றாய் வருஞ்சன்னி வாதத் திற்கு
மெத்திடா தற்ப மாக மிருதுவாய்ப் பொருத்த நீங்கும்
உய்த்திடு பழஞ்சு ரத்தோ டிரமுறைச் சுரத்தி னுக்கும்
வைத்திட வேகு மென்பர் மாமுனி வோர்க டாமே. (கூருஉ)

காதடைப் பொடுகண் குத்துக் கடுமையார் காதிற் கட்டு
வேதனை செய்யா தோடும் விளம்பிய முறைய தாகத்
தீதின்றிக் காதுள் விட்டுச் செவ்விதா யடைத்தல் வேண்டும்
ஏதிப்பேர் சன்னி வாத சுரத்தெண்ணெ யென்பர் மாதோ. ()

---

o கடுகு மூன்று-சுக்கு, மிளகு, திப்பிலி.

## சிறுசந்தனாதியெண்ணெய்.

வில்வவேர் பட்டை போக்கி விரைகமழ் மலாக்காக் கெந்தம்
கல்லியோர் பலம்வ கைக்குக் காய்ச்சுநீர் விட்டெட் டொன்றாய்
நெல்லிக்காய் சம்பீ ரத்தி னோர்கனி முசுக்கை மூன்றின்
நல்லசா றுன்பா லெண்ணெய் நவைபில்செவ் விளநீ ராமே. ( )

சேர்த்திடு வகையோர் நாழி திரிகடு கம்வ கைக்குக்
கூர்த்திட வைங்க மூஞ்சு கொண்டுகோ வின்பா றன்னை
வார்த்தரை மைபோ லெல்லா மருவிடக் கலக்கி யொன்றாய்ப்
பார்த்துநீ மூன்று நாளுந் சிறுகொதிப் பநவ மாக. (ருரு)

இட்டபி னுன்கா நாளி னியல்புள மெழுக தென்னும்
முட்டிய பதத்திற் காய்ச்சி வடித்ததை வைத்து மூழ்கில்
சுட்டிடு பித்தங் காந்தி துன்னிய விருமல் மேகம்
கெட்டிடுங் கபாலக் குத்துக் கிளர்கண்ணில் வலியும் புண்ணும்.

திகழுமிவ் வெண்ணெய் தன்னைச் சிறுசந்த னாதி யென்பர்
மகிழ்கோரோ சனையே குங்கு மப்பூவே புனுகே யிந்து
புகழ்பச்சைக்கர்ப்பூரந்தான் பொடித்தெண்ணெய் வடித்தநேரம்
இகழ்விலா திட்டு வைத்து மூழ்கவே யினிய மேன்மை. (ருஎ)

## பெரிய சந்தனாதியெண்ணெய்.

மிக்கசந் தனமோர் பத்துப் பலமெலி தாகச் சீவித்
தக்கநற் பாண்டத் திட்டுச் சலமுப்பத் திரண்டு நாழி
ஒக்கவே விட்டு வற்றச் ※சோடசத் தொன்றாய்க் காய்ச்சித்
தக்கோல மிளகு கோட்டஞ் சமுத்திராப் பச்சை யேலம். ( )

கார்புகா வரிசி கோட்டங் ○கொத்தங்கஸ் தூரி மஞ்சள்
சீரக மிரண்டு சுக்குச் சிறுதேக்குச் சிறுநா கம்பூ
சார்மிரு தாரு சிங்கி தக்ககற் கடக சிங்கி
பாரில வங்கப் பட்டை பத்திரி கூகை நீறே. (ருக)

---

※ சோடசத்தொன்று - பதினாறிலொன்று.

○ கொத்தம்-கொத்தமல்லி.

சாதிப்பூத் தேவ தாரு சடாமாஞ்சில் செண்பக கப்பூ
சாதிக்காய் பலியோர் மூன்று சாற்றதி மதுர மோடு
கோதற்ற தேற்றாக் கொட்டை கூறுவான் மிளகி தெல்லாம்
ஓதுநல் வகைக மூஞ்சொன் றொருப்பட விடித்தீ ரெட்டாம். ()

படிசலம் விட்டுப் பின்னோர் படியாகக் காய்ச்சி யந்த
மடிவிலாக் கஷாயந் தன்னில் வார்த்திலா மிச்சு வில்வம்
ஓடுகன்னார் சிற்ற மட்டி யோங்கிய பேர மட்டி
அடையு*நா ரங்கம் வெட்டி வேரகி லத்திப் பட்டை. (௫௬௧)

மெல்லிய பாதி ரிப்பூ வில்வப்பூக் குசும்பைப் பூவே
சொல்கரி சாலை யோடு துளசியே கீழ்காய் நெல்லி
வல்லாரை முசுமு சுக்கை வன்கொட்டாங் கரந்தை சீதை
மல்குநெய்ச் சுண்டி யோடு வளர்ந்தவெள் ளறுகு தானே. (௫௬௨)

சிறுகுமிழ் நெருஞ்சி யெல்லாஞ் செப்பிடு சமூல மாகும்
மறுவில்கற் றாழை சிந்தில் வருதண்டு சாத்தா வாரி
குறைவில்செங் கழுநீ ரோடு கொளுகிலப் பனையே யாம்பல்
அறையமுக் கிரவு கோரை யாமிவை தங்கி பூங்கு. (௫௬௩)

மாதுளம் பழத்தி னோடு வளருமுந் திரிகை மேவும்
தீதிலாப் பழமுஞ் சேர்த்துச் செவ்வையா யிடித்துக் கொண்டே
ஓதுநா லுன்கு நாழி யொண்சலம் விட்டுப் பின்னர்ப்
போதொரு படியாய்க் காய்ச்சிப் புகலுமக் கஷாயத் தூற்றி. ()

பாலுட னிளநீர் தானும் பகரொவ்வோர் நாழி விட்டு
மேலதா மெள்ளி லெண்ணெய் மிகுமிரு நாழி சேர்த்துச்
சீலமாய் மூன்று நாளுஞ் சிறுகொதி கொதிக்க விட்டே
ஏலவே மறுநாள் வட்டி லினிற்றூழம் பூப்ப ரப்பி. (௫௬௫)

உரைமெழு காப்ப தத்தி லுறுதியாய் வடித்துக் கொண்டு
வருகோரோ சனையிக் துப்பு வளப்பெறு குங்கு மப்பூப்
பெருகுகஸ் தூரி யோடு பேசிடுஞ் சவாது தானும்
தருவகைக் கொருக மூள்சு தானதிற் பொடித்துப் போடே. ()

---

* நாரங்கம்-நாரத்தை.

சிரத்தினிற் பொருத்தி மூழ்கச் செறிசல ரோக மேகம்
வருத்திடு மிருமல் மூல வரட்சியே கபாலம் பற்குத்
துரைத்தகண் கைகா றம்மி லூற்றிடு மெரிவு தானும்
துரத்திடுங் கயங்க ளாதி தொலைந்தோடு கொடியி லம்மா. ()

பெருஞ்சந்த னாதி யென்று பேசுமிவ் வெண்ணெய் மாரி
பொருந்திய பனிகா லத்திற் பொருத்திவைத் திருக்க லாகா
திருந்திறற் குமாரர்க் கன்றி யேனையோர்க் காகா தென்று
விரிந்திடு பொதிகை மேவும் விண்ணவ னுரைத்த வாறே. ()

## தீச்சுட்ட புண்ணிற்கு.

எள்ளெண்ணெய் வெற்றிலைச்சா றேற்றதோ ரளவாய்ப்பாண்டத்
துள்ளிட்டவ் விலைவெ டிக்கு முறுபதந் தனிலி றக்கி
மெள்ளவே யாறும் போது வெள்ளைக்குந் திருக்கத் தூளை
அள்ளிட்டுப் பூசு வீரே லக்கினி சுடுபுண் ணாறும். (௬௬௬)

## காதிற்குத்து—அடைப்பிற்கு.

பூமத்தங் காய்க்குள்வித்தைப் போக்கிவேப் பெண்ணெய்விட்டே
தோமிலா வலம்பு ரிக்காய் சுக்குள்ளி மிளகு தானும்
தேமுறு கடுகி னோடு வசம்பிவை தூளாய்ச் செய்தே
யேமுறக் காய்ச்சிக் காது ளிடக்குத்தோ டடைப்புந் தீரும். ()

## டை—வேறு.

புங்கம்வேர் துருவி நன்றாய்ப் பிழிந்தபால் தெங்கின் காய்ப்பால்
சிங்காதோராளவாய்க்கூட்டிச் செவ்வையாய்க்காய்ச்சியெண்ணெய்
அங்குற வடித்தே பின்னு மவ்வெண்ணெய் தன்னைக் காய்ச்சிப்
பொங்கிய பதத்தைக் கேளு போட்டவெற் றிலைவெ டித்தால். ()

எடுத்துவைத் திளஞ்சூ டாக வியம்பிய துருசு துத்தம்
விடுத்திடு வலம்பு ரிக்காய் வெள்ளைக்குந் திருக்கத் தூளை
அடுத்தவவ்வெண்ணெய் தன்னுட் போட்டதை யன்பாய்க்காதுள்
விடுத்திடப் புண்ணினோடு மேவுகுத் தடைப்பும்போமே. (௬௭௨)

## ஒடுவெண்ணெய்.

துத்தங்குத் திருக்கங் குக்கி றுரிசுடன் காசுக் கட்டி
சித்திர மூலி சூதஞ் சேர்வகை யரைக்க மூஞ்சு
மத்தஞ்சா றேமு ருக்கின் வளரிலைச் சாற்றி னோடே
அத்திலவே ரவித்தெ டுத்த கஷாயம்விட் டரைத்துப் பின்னர். ()

புங்கம்வே ருடனே தெங்கின் காய்ப்பூவுஞ் சரியெ டுத்தே
அங்கையாற் பிழிந்தப் பாலை யடுப்பேற்றிக் காய்ச்சி யெண்ணெய்
தங்குகாற் படியெ டுத்துத் தவறின்றி யிதிலே சேர்த்துத்
துங்கமாய்க் கலக்கிக் காய்ச்சிச் சோர்வினற் பதத்தைப் பாரே.

வெற்றிலை வெடிக்கு மந்தப் பருவத்தில் விரைந்து தானே
உற்றதை வடித்துப் பின்னு முறுசிறு சூடாய்ச் செய்தோர்
அற்பநற் செவிக்குள் வார்க்க வடைப்புடன் காதிற் குத்துப்
பற்றிடு வீக்கங் கட்டுப் பகர்காதி லொடுப்பு ணெல்லாம். (௱௭௫)

மாறுவ தன்றிப் பின்னும் வளுத்திடு மனேக மான
வேறுபுண் டானு மாறும் விளம்புமிவ் வெண்ணெயைப் போற்
தேறுகா துறுபி ணிக்குத் திறமான மருந்தொன் றில்லைக்
கூறொடு வெண்ணெ யென்று குணமாக விதன்பே ரோதும். ()

## இயங்கம்வேர்த் தைலம்.

இயங்கம்வேர் காற்று லாங்கொண் டிடித்தீரெண் படிநீர் விட்டுத்
தயங்கிரு படியாய்க் காய்ச்சித் தவறின்றி வடித்த தோடே
நயங்கொளெள் ளெண்ணெய் ரண்டு நாழிசேர்த் தரு*மரீசம்
வயங்கொளுங் கரிய சீரம் வகைபல மொன்று தூக்கே. (௱௭௭)

தூக்கியே கஷாயந் தன்னுற் றுகளற வரைத்துச் சேர்த்துத்
தாக்கிடு மடுப்பி லேற்றித் தவறின்றி யெரித்துக் காய்ச்சி
ஆக்குநன் மெழுக தென்னு மரும்பதத் தினில்வ டித்தே
ஊக்கமாய் விரேச னஞ்செய் துடறனிற் பூசுங் காலை. (௱௭௮)

குத்துவிற் புருதி சூலை குட்டஞ்செங் கரப்பன் வாதம்
மத்தமார் கற்க ரப்பன் வலிவண்டு கடிகி ரந்தி

---

* மரீசம்-மிளகு.

மெத்துசில் விஷஞ்சி ரங்கு செய்யதா நோய்க ளெல்லாம்
சத்துறு மியங்கம் வேர்நற் றைலத்தாற் றணிந்து போமே. ()

## அடக்கமெழுப்பித் தைலம்.

இரதங்கெந் தகம்வ சம்போ டினியசா திலிங்க முள்ளி
திரிகடு பெருங்கா யஞ்சற் சித்திர மூலி யெல்லாம்
வரிசையாய்த் தூள தாக்கி வஸ்திரந் தனிற்கள் ளிப்பால்
பரவிடத் தேய்த்துத் தூளைப் பாண்மையா யதிற்ப ரப்பி. ()

தடிதனிற் சுருட்டிக் கட்டி வேப்பெண்ணெய் தன்னிற்றோய்த்துத்
தடையின்றி யெரிக்கச் சிந்துந் தைலத்தைத் தலையில் வைக்க
விடம்வலி புடைய ணுகம் வெங்கடி தன்னு லான்மா
அடங்கியே சோம்பி னுலு மாவிமீண் டெய்வ தாமே. (௯அக)

கோதாரிக் கழிச்சல் சன்னி கொடுவலி யேர்ப்புச் சன்னி
வாதத்தான் மூடு சன்னி வலிசன்னி முதலாச் சொல்லும்
தீதுசே ரிவைக ளெல்லாந் தீர்ந்திடு மிதற்குப் பேர்தான்
ஏதத்தைச் செய்ய டக்க மெழுப்பிடுந் தைல மென்னே. (௯அ௨)

## பெருவியாதிக் குணம்.

கருதிய பெருவி யாதி கைகளிற் கால்க டம்மில்
வருமரு விரல்க டோறும் வருக்கரி தாய்வெ டித்தே
தருபுண்க ளாகி நாளுந் தான்குறைந் தளவிற் குத்தோ
டருகலில் விரண முண்டா மறைகுது மருந்து கேண்மோ. (௯அ௩)

## பெருரோகக்குடோரித் தைலம்.

எட்டிமா விலங்கை வேம்போ டிலவு*பூ வரச மிஞ்சில்
இட்டமா முருங்கை முள்ளி னிலவுநற் பறங்கி தன்னிற்
பட்டையொவ் வொன்று நன்றாய்ப் பகர்பல மொன்று கூட்டித்
தட்டிலா வேரு மைப்போ மெருக்கலை சதுரக் கள்ளி. (௯அ௪)

சாறணை நத்தைச் சூரி தபிர்வேளை காவி ளாயே
கூழுபூ மத்தை குன்றி கொடுவேலி சிவனார் வேம்பு

---

*பூலாஞ்சிஞ்சில் என்றும் பாடம்.

தெறிய வியங்கொவ் வொன்றுஞ் சேரரைப் பலம தாக
மாறிலா திவற்றை யெல்லாம் வளம்பெற விடித்த பின்னர். ( )

அருகவ பாண்டத் திட்டே யறுநான்கு படிநீர் விட்டு
வருமிரு படியா யட்டு வளமுடன் பிழிந்து விட்டே
உரைநிம்ப மாவி லங்கை யுற்றபூ மத்தை யோடு
தருமுருக்0 கிலைகல் வேளை தகுமிவை சாறெவ் வொன்று. (கூ அசு)

அரைநாழி யாய்ப்பி ழிந்தே யக்கஷா யத்திற் சேரும்
விரைபெறு சரக்கு வெள்ளைப் பாஷாண நிறுவி டம்பின்
வருமிரு நிமிளை யோடு மனோசிலை யிதாங் துத்தம்
துருசுகுர் திருக்க மஞ்சள் சொல்திரி கடுகே யுள்ளி. (கூ அஎ)

பெருங்காயம் வசம்பி னோடு பெருமெட்டி யழிஞ்சின் மத்தம்
பருங்கஞ்சா விவற்றின் கொட்டை பகர்ந்தசேங் கொட்டையோவ்
றொருங்குடன் கழஞ்சு தானு மொன்றள வாகக் கூட்டி [வொன்
நருங்கவே யரைப்ப தற்கு நன்முறை நவிலக் கேளே. (கூ அஅ)

கொடிக்கள்ளி சதுரக் கள்ளி கூறெ க் கலையே திலலை [றும்
எடுத்திடா யிவற்றின் பாலை யியம்பக்கேள் வகையொவ் வொன்
தொடுத்தகாற் படிய தாகச் சொல்லிய சரக்கி னோடே
அடுத்திடும் விரைக டம்மை யங்கமா யிவற்றின் பாலே. (கூ அகூ)

விட்டுவிட் டரைத்து நன்றாய் விரைவுடன் வழித்து முன்னர்ச்
சுட்டிய கஷாயந் தன்னிற் றுகளறக் கரைத்து வேம்பின்
ஒட்டிய வெண்ணெய் நாழி யொன்றதாங் கடுகி னெண்ணெய்
இட்டதோர் நாழி யாக விருங்கஷா யத்திற் சேரே. (கூ கூ0)

சேர்த்துட னடுப்பி லேற்றிச் செவ்வையாய் மூன்று நாளும்
பார்த்துடன் கொதிக்கச் செய்து நான்காநாட் பரிபும் *புண்கள்
தீர்த்திடும் பதத்திற் காய்ச்சிச் செவ்வையாய் வடித்து வைத்துப்
பேர்க்கரும் பெருவி யாதி யுற்றிடு பேர்கட் கெல்லாம். (கூ கூக)

அருவிரே சனத்தைச் செய்தே யறைதரு மண்ட லத்துக்
குறையரு னேத யப்பே ரும்பகு ரணமே யல்லால்

---

0 இலை என்பது ஏனையவற்றிற்குமொக்கும்.
* புண்கள் தீர்த்திடும்பதம் - சற்று முதிர்ந்த பதம்.

வருபெரு வியாதிக் கேற்ற வன்மருந் தினிதா யுண்டு
தருமிந்த வெண்ணெய் தன்னைத் தப்பாமற் புண்ணிற் பூசே. ()

பூசிப்பத் தியமுங் காக்கப் போகாத பெருவி யாதி
தேசம்விட் டோடு மம்மா செப்புமிந் நோயே யல்லால்
நாசமா மண்ட வாத கலிபக்க வாத சூலை
கூசிய முடக்கு வாதங் கொள்ளூருத் திரமாம் வாயு. (ரு. கூரு)

உட்குத்துப் புறவீச் சோடே யுலைதரு கண்ட மாலை
தட்பமில் வலியே வன்மத் தானத்திற் பிளவை யோடு
கட்டுவிற் புருதி சன்னிக் கட்டுநன் னரம்பு தன்னில்
முட்டிய சுருக்கு மாறுக் கிரந்தியே முறிகி ரந்தி. (ரு-சசு)

நாய்புலி முகச்சி லந்தி நரியெலி புலியே யாதி
பாய்தரு கடிக்கு முன்னர்ப் பகர்நோய்க்கும் பூச மாறும்
காய்கரு வழலை நாக மண்டலி கடுவே மிக்க
தாய்வரு புடைய ஞநி யருஞ்சர்ப்பக் கடிக டம்மால். (ரு கூ௫)

விடந்தலைக் கொண்ட தற்கும் விளம்பிய வாதத் தாலே
அடங்கிய சன்னி கட்கு மரியகோ தாரி யாலே
மடங்கிய சன்னிக் குந்தான் றலைபினில் வைக்க மாறும்
கொடுஞ்செயற் றைல நாமம் பெருரோகக் குடோரி யாமே. ()

## வெட்டையின் குணம்.

வெட்டையின் குணமு ரைக்கின் மிகுதந்தம் போல வெள்ளை
பட்டிடு மதன்பி னீரும் பாயுங்கோ சத்திற் குத்தி
முட்டவே வலிக டுப்பு முதிர்ந்திடு மெரிவு கட்டிற்
றிட்டமா யுண்டா குந்நாட் செல்லிற்கோ சத்தி னின்றே. ()

இரத்தமாய் விழுமி ரத்தப் பிரமிய மென்று முன்னோர்
உரைத்தன ரிதனி ஞம மொக்கநாட் கழிபிற் கோசம்
பெருத்துவீங் கிடுமு கப்பிற் பேசரும் புண்ணாய் மிக்க
வருத்தமா மிதனுக் கேற்ற மருந்துசிக் கிரத்திற் செய்யே. ()

## சிகிச்சை.

செய்யுநோய் கண்ட போதே சீரகச் சூர ணந்தற்
துய்யசஞ் சீவி யாகுஞ் சூரண மப்பேர் பெற்ற

பொய்யிலாத் தைல மொன்றைப் புசிப்பிக்க மாறு மன்றேல்
ஐயுருச் சலரோ கத்தை யகற்றுசஞ் சீவி செய்தான். (௩௯௯)

வல்லைபி லகற்றும் புற்று முகசிங்கி மருவிற் கேளு
சொல்லரு ரேதை யப்பேர்ச் சூரண மக்தி சக்தி
வெல்லு நல் லனுபா னத்தில் விரும்பியே பத்துப் போது
மெல்லவே யுண்ண மாறும் வெட்டைக்கும் புசிக்க நன்றே. (௪00)

## வாதசூலைக்குணம்.

தீதுறு வாத சூலை செய்திகேள் பொருத்துத் தோறும்
வேதனை யாக வீங்கும் வெடித்துடன் கடுத்துக் குத்தும்
ஓதுறு பிடிப்புத் தோன்று மூளைவுண்டா நடக்க வொட்டா
பாதங்கை முடக்கு முன்னே பகருநன் மருந்து செய்யே. ௪0க)

## சிகிச்சை.

இந்நோய்க்கு மருந்து கேண்மோ வேற்றநல் விரேச னஞ்செய்
துன்னுறு சித்ர மூல மோத ருரேதை யக்தான்
மன்னுநோய் தீர்க்குஞ் சண்ட மாருத சூர ணக்தான்
சொன்னவிங் கிவற்றி லொன்றைத் துகளாறு மனுபா னத்தில். ()

சேர்த்தொரு மண்ட லந்தான் றின்றுகொண் டிஞ்சி தில்லை
கார்த்திடு கொன்றை வேலிப் பருத்தியே கழற்சி வேளை
கூர்த்தமா விலங்கை கஞ்சாங் கோரை காவிளைநீர் முள்ளி
பார்த்திடு மாம ணக்குப் பாவட்டை யிவற்றி னேடே. (௪0௩)

## வாதசூலாங்குசம்.

எட்டியி னுற்ற நல்ல விலைவாத மடக்கி யெல்லாம்
தட்டின்றி யவித்த நீரிற் குளித்திந்தத் தண்ணீ ரோடு
மட்டதாய்ச் சதுரக் கள்ளி வாட்டியே பிழிந்த நீரும்
விட்டெட்டிப் பட்டை வேம்பின் பட்டைசா ரணையின் வேரே. ()

கொடிவேலி வேரி னோடு கூறிடு மியங்கம் வேரும்
நடைமுறை யளவாய்க் கொண்டு நண்ணிடு வசம்பே யல்லாற்
கடுகுள்ளி மிளகு சுக்குக் காயமு மளவாய்க் கொண்டு
கடினமா யரைத்து நன்றாய்க் கலக்கியே கொதிப்பித் துப்பின். ()

வாதத்தின் பிடிப்பு வைகு மிடமெலாம் வழுவு றுமல்
ஓதுநா டோறுந் தானே யுறமுறை பூச வந்த
வாதத்தின் பிடிப்பு முற்று மாறுமிம் மருந்தி னுமம்
தீதிலா வாத சூலாங் குசமெனச் செப்ப லாமே. (௪௬)

### கோதாரிக்கழிச்சலின் குணம்.

கோதாரிக் கழிச்ச லென்னுங் கொடியநோய்க் குணங்க டம்மைக்
காதினாற் கேட்க வுந்தான் கள்ளர்க்கு மச்ச முண்டாம்
வேதைசெ யிந்த நோய்க்கு வேற்றுமை பலவு முண்டாம்
பேதியு மூவாந்தி தானும் பெருக்கவே தோன்று மன்றே. (௪௭)

சிலகுண மலம்வ யிற்றிற் சிக்கியே சலமாய்ப் பேதி
வலுவதா யுண்டாங் குத்து வலியிவை வயிற்றிற் றோன்றும்
சலமென வேர்வை காணுஞ் சடம்பிசின் போல்வ தாகும்
நலிதரு தாகந் தானு நாவரண் டதிக மாமே. (௪௮)

அதிகமா யுடலி லுள்ள வருநரம் பெலாம்பு டைத்து
முதிர்வுற வலித்துக் குத்தி மோகமாய்க் கடுத்து ஊந்து
சதிசெயுஞ் சிலகு ணந்தான் சாற்றிய பேதி வாந்தி
கதியுறக் கண்ட போதே கடுஞ்சன்னி பிரவே சிக்கும். (௪௯)

குரலது கம்மிக் கண்ணுங் குழிந்துமூ லந்தொ டுத்துப்
பரிவொடு நாவ ரைக்கும் பகர்தரு வரட்சி யுண்டாம்
விரகுறு மலகு தானும் விறைத்துக்கா தடைக்கும் பேதி
மருவிடு மிணங்க ரைத்து வந்திடு மதிக மாக. (௪௧)

### சிகிச்சை.

இப்படிக் கடுங்கு ணங்க ளின்னமுண் டனேக மாகச்
செப்புவ னின்னோய் தீரச் செவ்வையா யவுட தந்தான்
வெப்புறு சித்ர மூலம் வெந்தய மிலவங் கம்மே
இப்பெயர்ச் சூர ணங்க ளின்னம்வா யுக்கு டோரி. (௪௧௧)

இந்தநன் மருந்தி லொன்றை யேற்றிடு மனுபா னத்தில்
வந்திடுங் குணங்கட் கேற்ற வகையதாய்க் கொடுக்க மாறும்
சிந்தியே யொழியா தாகிற் செப்பரு ஞேத யப்பேர்
நந்தலில் சூர ணக்*கந் நாமமாத் திரைவா தாரி. (௪௧௨)

* அருணோதயமாத்திரை.

சருவாங்க மிந்த நாமஞ் சாற்றுமாத் திரைக ளல்லால்
வருமிரு டர்க்குஞ் சண்ட மாருத சூர ணந்தான்
உரைதரு மிம்ம ருந்தி லொன்றினை யக்க ணத்திற்
குரியநல் லனுபா னத்தி லூட்டிட வொழியு மன்றே. (சகரு)

மருந்தினைச் சத்தித் தாலு மறுதர மும்ம ருந்து
திருந்தவே கொடுக்க வேண்டுந் தீர்ந்திடாச் சத்தி யாகில்
அருந்துநற் பானக் கத்தை யருத்தியே சோம்பில் லாமல்
இருந்துநன் மருந்து தன்னை யியல்புடன் கொடுத்தி டாயே. ()

உளைவுகுத் ததிக மாகி லொத்துக வக்கங் காய்ச்சிக்
கிளர்சன்னி மூடிக் கொண்டு கிடக்குத லன்றிப் பின்னும்
குளிர்கொண்டு நின்றான் மிக்க குணங்கண் டுள்ளங் கால்கைக்
களவதா *யுண்டை கட்டி யப்புறஞ் செய்யக் கேளே. (சகரு)

சிரசினிற் பெருரோ கத்தைத் தீர்த்திடுங் குடோரி யாதல்
அருமையா யடக்கந் தன்னை யெழுப்பிடுந் தைல மாதல்
விரைவுற வைத்துப் பின்னர் மேன்மையாய்க் காய்ச்சிற் சன்னி
வெருவியே யொடுங்கு மிந்த மேம்படு மருந்தி னாலே. (சகசா)

## பிரண்டைத்தண்டுப்பச்சடி.

பிரண்டையின் கொழுந்தை நெய்யிற் *பீதவன் னம்பொ ரித்தே
திரண்டிடு மிளகு நல்ல சீரகம் வெந்த யத்தோ
டரண்டரு மிளகா யுப்போ டருங்கடு கிவைநே ராக
மூரண்டரச் சேர்த்து நன்றாய் முதிர்பழப் புளியுஞ் சேரே. ()

சேர்த்தரைத் தந்தி சந்தி தின்றிடப் பொருமல் மந்தம்
ஆர்த்திடும் வாயு வாத மகற்றிடு மூலம் போக்கும்
பார்த்திதைச் சாதஞ் சேர்த்துப் பகர்கறி யாக வுண்டால்
நேர்த்தியாஞ் சுவைய தாகு நீளுடற் சுகம தாமே. (சகஅ)

## கருவேப்பிலைப் பச்சடி.

கருவேம்பி னிலைப்பூ நெய்யிற் கதித்தபொன் னிறம தாக
விரைவதாய் வறுத்துப் பின்னர் மிளகுசீ ரகமோ டுப்பும்

---

o பானக்கம்-சஉகூ-ம் செய்யுள் பார்க்க.
* உண்டைகட்டல் ஊசச-ம்செய்யுள்பார்க்க. * பீதவன்னம்-பொன்னிறம்.

